# ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள்

# பிள்ளைத்தமிழ்.

இஃது

சித்தாந்தசரபம் — அஷ்டாவதானம்

சிவஸ்ரீ

கலியாணசுந்தர யதீந்திரசுவாமிக ளவர்கள்

மாணவரும்

சென்னை முத்தியாலுபேட்டை ஹைஸ்கூல்

தமிழ்ப்புலவருமாகிய

பிரசங்காமிர்தம்

திருக்கச்சூர்

பா. வேலுதேசிக ரவர்களால்

இயற்றப்பட்டு

சிவநேயச் செல்வர்கள் சிலருதவியால்

சென்னை: வேப்பேரி

ஞானசம்பந்தா அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை அணா 3] 1916 [ரிஜிஸ்தர் காபிரைட்.

KMM0524

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் பிள்ளைத்தமிழ்.

இது

சித்தாந்தசரபம் – அஷ்டாவதானம்

சிவஸ்ரீ

கலியாணசுந்தர யதீந்திரசுவாமிக ளவர்கள்

மாணவரும்.

சென்னை முத்தியாலுபேட்டை ஹைஸ்கூல்

தமிழ்ப்புலவருமாகிய

பிரசங்காமிர்தம்

திருக்கச்சூர்

**பா. வேலுதேசிக ரவர்களால்**

இயற்றப்பட்டு

சிவநேயச் செல்வர்கள் சிலருதவியால்

சென்னை: வேப்பேரி

ஞானசம்பந்தா அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

நளஷு ஆடிமீ]

[ரிஜிஸ்தர் காபிரைட்.

# சா த் து க வி க ள்.

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

## சிவஸ்ரீ - கலியாணசுந்தரயதீந்திரசுவாமிகள்

இயற்றியது.

எந்தைபர னிணையடியி னெழின்மணமா ரூர்மறுகி லியங்கச் செய்த, சுந்தரர்க்கோர் பெருந்தமிழ்ப்பிள் ளைத்தமிழை யுயர்புலவர் சூழ்ந்து நோக்கக், கொந்தலர்பா லூர்வேலு தேசிகனு வலர்கோ மான் குணமாச் சொற்றான், இந்தநூ லின்பெருமை யப்பகழிக் கூத்தனே யிசைப்ப னம்மா.

சிவஸ்ரீ - கலியாணசுந்தரயதீந்திரசுவாமிகள்

சுவாமி வேதாசலம்

ஆகிய இவர்கள் மாணவரும்,

சென்னை முத்தியாலுபேட்டை ஹைஸ்கூல்

தலைமைத் தமிழ்ப் புலவருமாகிய

## ஸ்ரீமான், மணி - திருநாவுக்கரசுமுதலியார் அவர்கள்

இயற்றியது.

சொல்லினிக்கப் பொருள்துறுமப் பல்சுவையுங் கனிந்தொழு கிச் சொட்டச் சொட்டத், தொல்புலவோர்க் கிருசிதியாச் சுந்தரன் பிள் ளைத்தமிழைத் துலங்கச் சொற்றான், நல்வளஞ்சேர் கச்சூர்வாழ் நாவலவன் தமிழ்த்துறையி னயங்கள் மிக்கோன், துல்லியஞ்சேர் குணமுடைய வேலுதே சிகப்பெரியன் றாய்மை யோனே.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்

## பிள்ளைத்தமிழ்.

விநாயகக்கடவுள்.

மணிகொண்ட கொடிறுதவு தானப் பெருக்கன்பர் மாவினைத் தருவின் வேரை, மன்னுரு தேபறித் துத்தள்ள பிரியாண வசுவெரித் திடவோர் துணையாய்ப்; பணிகொண்ட குழைமேவு செவிவாத மோதவே பரிந்துவரு மெங்க டேவைப், பானுதி தேவரும் பணிபகட் டானனப் பண்ணவனை யஞ்ச லிப்பாம்; அணிகொண்ட கமலையிற் சவியீன்ற வெம்மன்னை யாசைக் கிசைந்த கொன்கன், ஆதிபா மன்றனருண் மேனிநிழ லானவெம் மையன்கோட் புலிப்பெ ணிருவர்; துணிகொண்ட மதிநுதலர் தந்தைஞா யிறுகிழார் தூய்மை செறி நல்ல மருகன், தொண்டரிசை யுலகெலாம் விளக்குமிசை ஞானியார் சுதற்குமொழி தமி ழிசையவே.

### க-வது காப்புப்பருவம்.

திருமால்.

தேமேவு மைந்தருத் தண்டலைச் சேல்விழிச் செல்வியிந்த் ராணி நகிலம், சேரகல விந்த்ரனே டமரர்முனி வரர்கணஞ் சிவகணத் தலைவர் பல்லோர்; கோமேவு மஞ்சைக் களத்துவெண் கரியுடன் குறுகினை மலையின் மருகன், கூவினு னென்னவே சென்றவெங் தேவனைக் குளிர்ந்தவரு ளோடுகாக்கத்; தாமேவுதுளவுபொன்கவுத் துவமு மணிமார்ப துதிசெய்யு மடிய வர்க்குச், சொல்லரிய நலமோங்கு பரமபத மீகின்ற சுடராழி சங்க மேந்தீ; நாமேவு வெண்டாமரையாட்கு நாதனூர் நண்ணுசீர்ப் பத்ம நாப, நண்ணரிய தீமை செறி தானவர்க் கோர்கால நளிர்கருங் கடல்வண் ணனே. (க)

சிவபெருமான்.

சொல்லரிய வைந்தொழிலு மெனதன்றி மற்றவர் சுதந்தரர்க ளல்ல ரென்று, தொன்மைமறை வாயிலாற் கூறினது மன்றியே தோன்றுறக் காட்டு மாறு; நல்லொளிய வைம்மன்றி னுடகஞ் செய்யிறையை நாதத்த துவத்தின் மேலா, நண்ணுமெம தையனைப் பாகீரதிச்சடில நாயகனை யேத்தெ டுப்பாம்; வெல்லரிய வைம்புலனும் வென்றமுனி வோர்கடுதி விமலனைக் காரி யேந்தி, விண்ணுட ருயிர்காக்க வருள்பரம வள்ளலை வேந்தர்நர சிங்க முனையர்; மல்லுரியபுய வோங்கல் வள்ர்குணு தீதனை மாமறைப் பொருளை யேத்தும், வண்டமிழ்க்கவிஞனை நாவலூர்ச்சைவனை வன்மையாய்க் காக்கவென்றே.

பார்வதி.

தெள்ளமிழ்த மனையதிந் தமிழ்வேத மருள்செய்து சிவமாம் பாற்கு மேலோர், தேவனென் பானொருவ னிலையென்று காட்டவரு டிருநாவ லூரின் வந்தோன்; கள்ளமறி யாதகெள சிககோத் திரத்தினேன் கலியாண கால மதனில், கண்ணுதற் பார்வையா லியாருமீ டேறவருள் கற்பகத் தைப்பு ரப்பாய்; பிள்ளைமதி நின்னுதற் கிணையில்லை யென்னவே பிரான்வேணி வனம டைந்தும், பெருகுநதி மூழ்கியுந் தவமாற்ற வ்வனனிப் பெரும்பாம்பு சாய லைக்கண்; டுள்ள மதின் மிகவஞ்சி யயன்மாலின் வெண்டலையி னுறுபுழை யொளிக்க மேவும், உத்தமச் சத்திகல் யாணியே வுலகின்ற வொப்பிலா வெங்க ளுமையே. (௩)

விநாயகர்.

வேறு.

காசிபன் கான்முளை யாயவி முத்தக் காவலன் றன்மாடே
காட்சிய தாகவே யெய்தி யநேகங் கைதவ வசுரர்களை
விசியொர் தவபுரு சுண்டியின் மேன்மையை வேர்தற் கறிவித்தே
விண்ணவர் தங்கட் குறுதுணை யாகிய விமலற் பணிகிற்பாம்
தூசிய விடையினர் பாலுறு மால்விடு தூநெறி யாளர்க்கே
தோமறு முத்தியை யீகுதுமெனமறை சொல்லிய விறையோனைப்
பாசிழை யாரூர் மாதின தாடற் பாறுற வேதூது
படர்தர வேவிடு சுந்தர னைத்தினம் பண்புடன் காவெனவே. (௪)

சுப்பிரமணியர்.

கச்சூ ராலக் கோயிலின் மேவுறு கண்ணுத லெம்பெருமான்
கனிதரு மிகுபசி கண்டுள நைந்து கரைந்தொரு வேதியனாய்
நச்சூர் தருகந் தாமறை தரவமர் நலமுறு பூசுரரில்
நணுகிநல் லமுதினை யேற்றிட வுண்டரு ணம்பியைக் காத்திடவே
மச்சூர் தருகு ருடனவன் கிளைகெட மாட்டிய வேலவனை
மகிழ்குஞ் சரியிற வுள்மக டமுவிய மகிணனை வீரமுறும்
பச்சூர் மயின்மிசை யடியவ ரெதிர்வரு பண்பனை யீராறு
பாணிய முருகனை வாரண மேந்திய பகவனை யேத்துதுமே. (௫)

பிரமதேவன்.

வேறு.

பாடும் பதிகத் தகமகிழ்ந்தே பசும்பொன் னளவி லாயிரங்கள்
பண்பாய்ப் பெருமா னாருளப் பரவைக் குகந்தே யளித்தானை
நாடும் புகழார் சித்தவட நலமார் மடத்தி னள்ளிருளில்
நாரி பாக னடிசூட நண்ணு மிறையைப் புரந்திடுகே
தேடு மரிய மறைபகருஞ் செம்மைத் தால வெண்மரைவாழ்
செல்வி கலைமான் மகிழ்கணவ சிவ கோடி வினையோர்ந்து

கூடுந் தருவா திகளியுங் கோவே முதலாந் தொழிற்கருத்த
கோபாலனுக்கோர்பாலகனேகுளிர்மாமரைவாழ்குனக்குன்றே.

திருமகள்.

வேறு.

தொண்டைநாட்டினிற்கண்டல்சூழ்தருதொன்மையார்தருமொற்றி
சோதியார்தருமேனியானருள் சுவணமேனியசங்கிலி [யூர்ச்
வண்டையாதரி வனசநேர்தன மார்பினொற்றிய மணாளனை
மன்னுசீர்ச்சடையன்குமாரனை மனமுவந்துநீ காக்கவே
அண்டர் வேண்டிய படியருட்செய வமுத கும்ப மலர்க்கரத்
தமைத்து நற்பய வேலை வந்தருளன்னை யேவடபாசடைக்
கண்டுயில்தரு மாயன் மார்பகங் காணியாக்கொளுந் தலைவியே
காட்சி மல்கிய செல்வியேயருள் கருணையார்குண தேவியே. (எ)

கலைமகள்.

வேறு.

சேரமான்பெருமாடனக்குரியநண்பனைச்சிறுமதலைமுதலைவாயிற்
செகமெலாங்காணவருவித்தநாவலவனைச்சிவமணங்கமழுகின்ற
ஈரமார்கலவைசாந்தணிமார்பனையிறைவரீந்தசீர்ப்படிகலிங்க
வெழின்மூர்த்திபூசையைத்தவறுதியற்றியருளெந்தையைப்பரிந்துகாக்க
ஏரமாமலைமாதின்விழியாகிவழிபட்டவெவர்கட்குமபரஞான
வியநெறித்திட்பேரஞானங்கைகூடவருளிறைவிமறையோன்றனக்கோர்
தாரமாயவனுவினீங்காதவெம்மன்னைதவளமார்மரைமிவாசி [யே.
தகுதிமிறையிசைவீணைபாணிதிருமருகியேசான்றசீர்ச்சரச்சுவதி

சத்தமாதர்கள்.

வேறு.

செய்ய காலனம் பாண்டில் கேகயஞ் சீற்ற மிக்காநா காந்தகன்
சிந்து ரப்பகை யாம்பல் சோகெனுஞ் சீர்த்த வூர்திய ராரணம்
மெய்ந லத்தவில் குந்த மாழிசூர் வீற லங்குலி சங்கமு
விளங்குமாயுதமேந்துமேழெனும் விமலைமார்பதம் போற்றுவாம்
உய்ய வேதிய ராவ ணத்தொளி யோங்கி யொற்றியூர் வல்லிபூண்
டொழுகு முத்தமி ழாங்க டாம்பொழிற் றுத்த மச்சிவ பத்தரின்
மைய லாம்வினை மாம்ப றித்தெழில் வாய்ந்தசீர்ப் பரவை யாடியே
வளரும் வாரண மான வாரண வள்ள லைத்தினங் காக்கவே. (கூ)

முப்பத்துமூவர்.

வேறு.

சங்கர ஞாடி யன்றியோர் தேவைச் சற்றுமே போற்று மாதவ
மிக்கோன், சங்கரி யாகிய மாத வனுக்குச் சம்புவினேந்தக் கரமொழி
தூயோன்; எங்களை யாளுப மனிய னிறைஞ்சிய விறைவனை முது
குன் றமர்தரு மீசன், ஈந்திடு பன்னீ ராயிரம் பொன்னினை யெழின்

மணி முத்தக் குடினைப்பி லிட்டே; தங்கு விராட்புரு டற்கொரு மூலா தாரமா மாரூர்த் தாமரை மேவுங், தண்ணிய வாவி யிறங்கி யெடுத்தருள் சதுரனை நாவற் சைவச் சேயைப்; பொங்கொளியென் மர் வசுக்கள் மருத்துவர் புகலிரு வர்பன் னிருசுடர் பூமன், புருவுதி பன்னொருருத்திரர்பாதம்பொலிவுடன் போற்றுவம்புரந்திடுதற்கே.

காப்புப்பருவம் முற்றிற்று.

## உ-வது செங்கீரைப்பருவம்.

கங்கைமுடி வேணிசெங் கனலேறு செங்கையன் கருணையா ரீரி னட்டிக், கருதரிய சிரபர ஞானகலை யொற்றுடை காட்சியுற மேனி யொற்றிப்; பொங்கொளி விளங்கவிரு வினைநீற்று நீற்றைப் புனைந்துமிறை வென்றபூமிப், பொட்டுமிட் டாகமத் தந்தமா முச்சிப் பொலிந்தாவ பேத மாகுங்; துங்கமிகு மணிகளா லிழைசுட்டி நாற் றிமிகு தூயபர ஞான வாரி, தோன்றுமரு ளமுதத்தை யிசைஞானி யாறுண்டு சுகசிவா னந்த மதனைச்; செங்கொவ்வை வாயினு லருள் பரம குழவியே செங்கீரை யாடி யருளே, திருநாவ லூரினணி பெரு நாவ லோரின்மணி செங்கீரை யாடி யருளே. (க)

உலகெலாம் புகழிமய மன்னனவ தாரமா யுற்றதெய் வீக மன் னற், குறுமனைவி குடநாட னீன்றபது மாவதியி னைப்பறு தவத்து தித்த; இலகணி விளங்குசீர் முனைப்பாடி யாண்மன்ன னெந்தையீ சன்ற னடியார்க், கேயுமோர் நரசிங்க முனையரன் பாய்க்கொண்ட வினிமையேய் வுற்ற மைந்த; நலமுலாம் வெண்பனில மீனுமித் தில வொளியை நறியதேன் பொழியு மாம்பல், நளிர்தவள மதியினில வென்றலரும் வாவிசூழ் நந்தாத ஞால மாதின்; திலகமென வள மிறைமை பூண்டவா ரூர்வாச செங்கீரை யாடி யருளே, திருநாவ லூரினணி பெருநாவ லோரின்மணி செங்கீரை யாடி யருளே. (உ)

வையகம் புகழ்கின்ற சிவராச யோகநிலை வாய்க்கும் படிக்குன் செந்தா, மரைமலர் நிகர்த்ததாண் மனதினி லிருத்தியே மாதவஞ் செய்த மிழலைத்; தய்யபுரி வாழ்குறும் பர்க்கருளி வடகயிலை சோதிபா தத்தி னிழல், தோயும் படிக்குநீ செல்லுமுன் னுளினது தோன்றுவித் தேவிடுத்தோய்; மையளா வுறுசெறென் மலைதனைக் கமலையா மாநகர்ப் பரவை யர்க்கா, வன்பூத ராசியின் வாயிலாற் சிவனருள வண்டமிழ்ப் பதிக மோதுஞ்; செய்யவாய்க் குழவியே யமுதமே செல்வமே செங்கீரை யாடி யருளே, திருநாவ லூரினணி பெருநாவ லோரின்மணி செங்கீரை யாடி யருளே. (௩)

ஐவகைப் பாசங் கழலவடி யார்க்கருளு மானந்த பரம யோகர், அவனிமுத லானபல வுலகங்க ளீடேற வாடிதோன் றுந்த வுரு வை; மெய்வகைச் சுந்தரா வருகவென் றழைப்பவே வெளிவருஞ்

சைவ குருவே,-வேலையர் துகிலவனி புகழ்கொடுங் கோளூர் வேந்த ராஞ் சேர மானுர்; உய்வகைப் புரவிமீ தெய்தவெள் ளானைமே லூழிதோ ரேருங்கு மோங்கல், உற்றதமிழ் மறைமொழியு மந்தணு வுலகமா ளொப்பிலா வேந்தர் குமரா; செவ்வகைய ஞானவொளி வீசுமா ணிக்கமே செங்கீரை யாடி யருளே, திருநாவ லூரினணி பெருநாவ லோரின்மணி செங்கீரை யாடி யருளே. (ச)

கும்பரோ தவளவா ரணமேறி யாரமீன் கோகனக வாவி மேவுங், கொண்டாட்ட வாளையம் போத்துவின் டாவியே கோமடித் தலத்தை முட்டத்; தம்பசிய கன்றுக மெனவுள்ளி யமுதநற் றாரைகள் பெருக்க வாவி, தன்னிலவை மிகுதியாய்த் தீரம் புரண்டுசெறி சாலியின் போர்கள் சோலே; பம்புவே கத்துடன் போர்த்தலே மடங்கியெறி பரவையிற் கொண்டு சேர்க்கும், பாங்கோங்கு சிர்முனைப் பாடிநன் னுட்டுளோர் பண்டைநற் பிறவி தோறும்; செம்மைபெற வேசெயுந் தபோபலப் பாலனே செங்கீரை யாடி யருளே், திருநாவ லூரினணி பெருநாவ லோரின்மணி செங்கீரை யாடி யருளே. (ரு)

வேறு.

கொந்தார் கொன்றைப் பைந்தார் சூடிய கோடீரன்
கோலத் திருவடி யேகதி யென்றவ ஞடோறும்
வந்தா ரடியார் தங்கட் கேசெம் பொன்னீயும்
மன்னர் பிரான சிங்க முனைப்பேர் வள்ளற்கு
நந்தாச் செல்வ மாய்வரு மைந்தா நன்றுகும்
நவிறமிழ் மறைசொலு நாயக னேமண் ணுட்டோர்கள்
சிந்தா மணியணி வளர்சேய் செங்கோ செங்கீரை
சேரர் பிராற்கோ ராருயிர் செங்கோ செங்கீரை. (சு)

உலகவர் சிவஞா னம்பெறச் செங்குன் றாராளி
உள்ளிய தன்மைய யோர்சிவ னிமுத லடியாலே
நலம்வளர் தொண்டத் தொகையரு ளுவ னகரானே
நந்துறு பாணிக் கெட்டாப் பதசிர நல்லோனே
வலமுறு தவநெறி பூணிய மேனிய வானோர்மா
மதிமுக மார்பர வைப்பிடி தோய்குஞ் சரமேசேர்த்
திலகம தாகிய சைவா செங்கோ செங்கீரை
சேரர் பிராற்கோ ராருயிர் செங்கோ செங்கீரை. (எ)

வேறு.

நவரச மிக்கெழு தமிழ்மறை யருளிய நல்லோ யெங்கோவே
நடமிய லொப்பறு பரனுறை பதிகளி னெல்லாஞ் செல்தேவே
தவநல முற்றிய சிவமணங் கமழ்தரு பண்பே யுந்தேனே
தடமலே யொப்புறு தனமுகி லனைகுழ ற்ன்னூர் பொன்மானே
இவளென மெய்ப்பெறு பரவையி னணிமிகு நெஞ்சா ரும்பேரே
இமையவர் நற்றுதி நிதமறை தரமுத லெய்திய நல்லேரே

திவஙிறை பொற்றியி னிகளம தருமிறை செங்கோ செங்கிரை
சிறுமி வனப்பகை குரவவெ னிதிபதி செங்கோ செங்கிரை. (அ)

வேறு.

புக்கொளி யூரவி நாசியின் வேதியன் புதல்வற் றருபேறே
பூவமர் மானனை யாள்பர வைத்தோள் புணர்தரு புரவலனே
கைக்கரி மீதினி லேறிப் பரனுறு கயிலைக் கேகியவா
காமனு நாணுறு மேனிய வேதிய காவிரி வழிவிடவே
அக்கரை யேறி யரன்பதி பல்கண் டகமகி ழெம்மானே
யருமுனி வர்க்குறு துறவினை வேட்டரு ளமலன் றரவேற்றோய்
திக்கய மனைநர சிங்கர்க் கொருசுத செங்கோ செங்கிரை
தோரர் வீதிகு மூரரு ருறைபவ செங்கோ செங்கிரை. (கூ)

செங்கா லன்னஞ் செந்தா மரையிடை சோரப் பயிறேனி
சிர்க்கயி ரவமுகை தன்பாற் சென்றிசை செய்வது பின்கணவன்
நங்காய் பரமக ணுறுதற் றகனென நவில்வது போன்றுளதண்
நன்னீர் நிறைதரு வாவிக ணூரன னினைக் கரமேய
சங்கே யிதுவென வாரண மூர்தரு சாலிகள் விளைகழனி
சசிதண வன்றே வலகள வளவிய தண்டலை சூழ்தருமோர்
சிங்கா ரம்பொலி நாவலூர் வருமிறை செங்கோ செங்கிரை
தோரர் வீதிகு மூரரு ருறைபவ செங்கோ செங்கிரை. (ய)

செங்கீரைப்பருவம் முற்றிற்று.

## ௩-வது தாலப்பருவம்.

சில வீஞ்ஞா னகலர்க்குச் சிவமா ஞானந் தானுகச்
செறிவ தேய்ப்ப மயிர்க்குட்டி சேரும் வண்டா முருவமதே
கால கால னெதிர்நின்றே கருணை மயமாக் குவதே போல்
கமறும் புழுக்கள் குளவியிசை காட்டித் தானுக் கிடுமுறைமை
எலப் பொதியுங் கச்சூரி லெய்த மலையின் மருந்தானூர் [தோய்
இரங்கிப் பசிக்கங் கனமேற்றே யிடவே யருந்திப் பாவிசைத்
சேலம் பகமார் சங்கிலியைச் சேரும் புயத்தாய் தாலேலோ
செழியுந் தமிழ்மா மறைவழியுஞ் செவ்வாய்க் குழவி தாலேலோ.

பொன்மார் பகன்றன் விழிவனசம் புனத்து மாயி னிவைமணமும்
பூவாழ் பிரம னிந்திரன்றன் புனையு மகுடச் செழுந்தாரின்
மன்னு மணமு முமையவடன் மலருங் கைத்தா மரைமணமும்
வாத வூரன் வாசகத்தேன் வாக்கின் வேந்தன் சம்பந்தன்
பன்னு மினது தேவாரப் பதிக மறைகள் மணக்குந்தாள்
பரவு மாரூர் வீதியினிற் படரப் பரவை மனைத்தூது
தென்னென் னிகழி வேளிபனைச் செல்ல விடுத்தாய் தாலேலோ
செழியுந் தமிழ்மா மறைவழியுஞ் செவ்வாய்க் குழவி தாலேலோ.

சீதை மதியூர் முதுகுன்றூர் சிவனை ரளித்த செழும்பசும்பொன்
செப்பும் பன்னீ ராயிரத்தைத் திரைசேர் மணிமுத் தாநதியில்
போத விட்டுக் கமலைநகர்ப் பொய்கை வருதற் காணுற
பொன்னம் பரவை நகைத்திடவே புராரி யடிகள் மிகப்போற்றி
ஏதந் தீரப் பதிகத்தா லேத்த விறைவ னருள்சுரந்தே
ஈய விதயங் களித்தெடுத்த விறையே சைவ மறைக்கன்றே
தீது தீர வுலகுதித்த தியாகன் றோழா தாலேலோ
செழியுர் தமிழ்மா மறைவழியுஞ் செவ்வாய்க் குழவி தாலேலோ.

புத்தூர் மணப்பந் தரின்கண்ணே புராரி விருத்த மறையோனாய்ப்
போர்த்து நின்னை யடியனெனப் புகன்ற வார்த்தை பொறாதவனாய்ப்
பித்த னெனவே யுரைத்தன்றிப் பிழைபே சினையென் றுவணத்தைப்
பிடுங்கிக் கிண்ட வன்றொண்டப் பெயரோய் குருகா வூரின்கண்
அத்தன் பொதிசோ றிடவுண்ட வருமை யடிய சுந்தரனே
அறையுஞ் சடங்க விப்பேதை யரனார் பாத மடைவதற்குச்
சித்தம் வைத்தே யவதரித்த செல்வா வெந்தாய் தாலேலோ
செழியுர் தமிழ்மா மறைவழியுஞ் செவ்வாய்க் குழவி தாலேலோ.

உலகங் கடந்தோர் புகழ்ஞான வுருவே பசிய கோமளமே
ஓங்குஞ் சைவ மறைக்கன்றே யுயரும் பரம சிவமணமே
இலகு மிசைஞா னிக்குருந்தே யெடுப்பீ டில்லாத் தவநெறியே
ஈசன் வடிவே வற்றாத வின்பக் கடலே யெனதிதய
மலமா சென்னு மஞ்ஞான மாய வருநல் லொளிவிளக்கே
மாதர் பரவை சங்கிலிகள் மகிழு மாமை மணிக்குன்றே
சீல மிகுந்த பத்திநெறி சேருங் குருவே தாலேலோ
செழியுர் தமிழ்மா மறைவழியுஞ் செவ்வாய்க் குழவி தாலேலோ.

வேறு.

வானுள விமையவர் வாடி மெலிந்துற வருகடன் மாநஞ்சை
வன்கயி லைக்கிரி மேவிய வீசன் மானுறு சந்நிதியில்
தானுற வேவிட் டன்னவ ரச்சந் தவிரப் புரிவாழ்வே
தண்மலர் கொய்தவ் வக்கா லங்களி றுமஞ்செய் திவோய்
தேனுறு தருமகிழ்க் கீழ்ப்பெரு மானுறச் செப்பிய தவமணியே
திருவெண் பாக்கத் தூன்றுகோல் பெற்றவ சோற்கு யிர்தேளத்
தானெனு மிறையவ வாரூர்ப் பெய்ரிய தாலோ தாலேலோ
சங்கர னார்சீர்ப் பொங்கொளி மேனிய தாலோ தாலேலோ. (சு)

மாயா வுலகம தாசையை விண்டவர் மழமுனி யருள்பாலர்
மாதவ னுக்குயர் தீதக தீக்கையை மா னுற வாற்றியனேன்
தோயா ரொளிமுடி சேகர மடிவைத் தூயவ ரேமெனனச்
சொல்லும் குரவரி லொன்றாய் நின்றவர் சுத்தாத் துவிதமெனும்

ஏயார் தருமெய்ச் சமயம் வளர்த்தவ ரின்சுவை யமுதாழி
இயல்புற வுண்டவ் ராமுப மன்னிய ரேத்து பெருந்தகையே
தாயா ராமிசை ஞானியர் கான்முளை தாலோ தாலேலோ
சங்கர னார்சீர்ப் பொங்கொளி மேனிய தாலோ தாலேலோ. (எ)

பெருமங் கலமா நகர்வரு வேளாண் பேர்மர பவதரித்தார்
பிறைபணிவேணிய னடிதம்பொருளெனும் பெற்றியர்வைராக்யர்
திருமலி நம்பியா ரூரரீ பெந்தை திருவா ரூர்நகரின்
தெருவழி தூதவிட் டதுகேட் டுளமழி செயறனை நீக்கிடவே
பருகுடர் நோய்வர வருளிநே யத்துவம் பரமனர் பண்ணமகிழ்
பண்புறு மறையவ விறையவ நிறைதவ பன்னவர் புகழ்தமிழா
தருமலி சோலைசூழ் நாவல ராதிப தாலோ தாலேலோ
சங்கர னார்சீர்ப் பொங்கொளி மேனிய தாலோ தாலேலோ. (அ)

வேறு.

அருமறை நாவற் சைவச் சிறுவா வன்ற ரூலேலோ
அவனிசெய் தவவுரு வாய்வரு மெந்தா யையா தாலேலோ
கருவறை செல்லா தடியர்க் காவுறு கருணா தாலேலோ
காரிகை யாநல் லெழிலுறு பரவையின் கண்ணா தாலேலோ
பொருணிறை தமிழ்மறை சொல்லிய வாயா பொன்னே தாலேலோ
புகலூர்ச் செங்கற் பொன்னாப் பெற்றவ பூமான் ரூலேலோ
வருமுறை யானர சிங்கர்க் குறுமகிழ் மைந்தா தாலேலோ
வாரண னரனன் காரணன் மேனியில் வந்தோய் தாலேலோ.

கோட்புலி யார்பெண் கட்கொரு தந்தாய் கோமான் ரூலேலோ
குரவணி குழலுமை சேடிய ருக்கொரு கொண்கா தாலேலோ
நாட்பரு வத்தலர் பூந்தா ரணியுர நல்லோய் தாலேலோ
ஞானத் தவமுனி வோர்க ணிதந்துதி நம்பீ தாலேலோ
தாட்புக முயல்கழ றிற்றறி வாரொடு சார்ந்தாய் தாலேலோ
தரைபுகழ் திருமுனைப் பாடியர் கோவே சதுரா தாலேலோ
வாட்பறை ஞானநா தர்க்கொரு தோழனும் வள்ளா ரூலேலோ
வாரண னரனன் காரணன் மேனியில் வந்தோய் தாலேலோ.

தாலப்பருவம் முற்றிற்று.

## ச-வது சப்பாணிப்பருவம்.

மேகசா லங்களென மேதியின் கூட்டங்கள் மேவுறும் வாவி வாழும், வியன்வாளை மீனினஞ் செருத்தலின் முட்டவவை வெஃகுறுங் கன்றென் றெணி இ; வேகமாய்ப் பாலைப் பெருக்கிட வழிந்து கரை விளைவயற் சாலி பாய, விளம்புபல் வளமெலா மோங்குசீர் மழபாடி மேவுவா யென்அு பரமன்; மோகமாய்க் கனவிளிடை யரு

ளவே கேட்டெழீஇ முகமலர்ந் தத்த லம்போய், முகிணிலாச் சூடியைப் பாடியருள் பெற்றவா முதுக்குறைவு மன்னு பெரியோய்; சாகமொய்த் திடுமலர்த் தாமமார் மார்பனே சப்பாணி கொட்டியருளே, தப்பாத மெய்ப்போத நற்பூத கைப்போதிற் சப்பாணி கொட்டி யருளே. (க)

அருமறைகண் முறைபேசு மண்ணலார் கைப்போதிலமரடிமையாவணத்தை, அன்புறுபுத் தூர்மணப் பந்தரினி லந்தணர்களாருமவை யிற்பறித்தே; ஒருமுறையின் முறைமையோ வென்றேல மிடவே யுளுற்றிவன் ஹெண்ட னென்னும், ஒண்பெயரு மடிமையாந் தன்மையும் பெற்றிட்ட வொப்பிலாப் பரம யோகி; திருமுறையினேத்திடும் பரவையார் கரமெனுஞ் செய்யபொன் வண்டினஞ்சேர், செங்கமல முகைபிடிக் கத்தமூம் பேசெழி திருக்கையா லெங்கணெஞ்சம்; தருமகிழ்வு மிக்கெய்த வரனுக் குகந்தவா சப்பாணி கொட்டி யருளே, தப்பாத மெய்ப்போத நற்பூத கைப்போதிற் சப்பாணி கொட்டி யருளே. (உ)

கொங்கேறு பெருவாரி சிகராவி பாசிலைக் கூட்டத்தி னிடையின் மலரும், குளிர்கமல மைந்தருவி னிழலின் கண்ணரசு கொள் தேவர் கோமான் மெயில்; அங்கேறு விழிகள்போன் றுளவழகு பொலிவுற்ற வையர்பாச் சிலாச்சி ராமத், தரும்பொனீ தருவையென் றேகேட்க வவரொன்று மளியா திருக்கவேதான்; இங்கேறு விடையரா மிவரலா தில்லையோ வெங்கடம் பிரானு மென்றே, இசைபாடு காவலோய் வசையிலாச் சீர்த்தியோ யெமதருமை மிக்க கோவே; சங்கேறு வயனுவல் சைவவர் தனர்குழவி சப்பாணி கொட்டி யருளே, தப்பாத மெய்ப்போத நற்பூத கைப்போதிற் சப்பாணி கொட்டி யருளே. (ங)

தேவுறுங் கயிலாச மாமலையின் மேவுசீர்ச் சிகண்ட பரமனணியுந், திருப்பளித் தாமந் தொடுப்பதன் றவன்மகிழ் திருத்திகழ் துணைக்க வரிகள்; மாவுறுஞ் சந்நிதியில் வீசுந் திருக்கைகொடு மலையரையன் மகளின் மேனி, மாசிழல தாகவரு சேடியர்கள் கொண்கனே வளமெலா மிகவு மோங்கக்; காவுறுஞ் சைவமுந் திருநீறு நிலைபெறக் கவுணிய னுதித்த தெய்வக், காழியைக் காலன் மிதிக்கப் படாதெனக் கருதியே வலம்வ ருங்கால்; தாவுறும் வேகவேற் றுடையனைக் கண்டவா சப்பாணி கொட்டியருளே, தப்பாத மெய்ப்போத நற்பூத கைப்போதிற் சப்பாணி கொட்டி யருளே. (ச)

தெங்குநிகர் கொங்கையுஞ் சேல்விழியு மைக்குழலுஞ் செங்குமுத மன்ன வாயும், தீயபய மொழியுமார் மாதர்சிற் றின்பந் தீர்ந்தவர்க் குயர்ந்த முத்தி; இங்களித் திடுவோ மெனமறைகள்

சூடிடு மிளம்பிறை யணிந்த வேணி, ஈசனைப் பாதியிர விற்றாது பரவைமனை யேகிவர வேவு பெரும; பங்கயஞ் சேதாம்பன் மிகு வாவி சோலையும் பண்ணையுஞ் சூழு நாவற், பதிவந்த சைவமறை யோர்குலப் புங்கவா பதியுருவின் வந்த பரமா; சங்கையில் லாமல் புவி வாழவரு ளியதேவ சப்பாணி கொட்டி யருளே, தப்பாத மெய்ப்போத நற்பூத கைப்போதிற் சப்பாணி கொட்டி யருளே.

வேறு.

மதநகை யஞர்கொலை மோகம் விகற்பமும் வாய்ந்திடு கற்பமொடு
வழங்கு குரோதமு மெண்குண மாணவ மாற்சரி யம்மோகம்
கதமுறு பொய்யய ரஞ்ஞா னம்பயங் காய்வுறு பைசாவும்
கழறரு சூங்ய மேழ்குண மாயையுங் கசடார் பரவிந்தை
விதவிரு வினைசெயல் விடுத்த லிருத்தலு மேவல் கிடத்தலுமாய்
விளம்பிய வறுகுண கருமமு முயிர்களை விடவரு டமிழ்பாடிக்
குதுகல மவைபெற நன்றுசெய் புண்ணிய கொட்டுக சப்பாணி
குறுநகை யார்பர வையினுட நழுவுகை கொட்டுக சப்பாணி. (சு)

மருதமர் கிள்ளைக ளஞ்ச மொழிந்துகண் மானுறு முண்டகமு
மலர்குமு தமுநீ லங்களு மவயவ மாறெனக் களைகட்டுத்
திருமணி நிறைதரு காஞ்சியின் சூழற் செறிதரு மகினற்றேய்
சிரெழில் கடைசிய ருலவுறும் வளவயல் சிறையளி முரல்சோலை
கருமுகி றவழ்தரு மாளிகை சூழ்தரு கழறரு திருநாவல்
காவல மேவல ரூரெரி யச்செய் கண்ணுத லின்றோழ
குருமணி யிழைகல னொளிர்தரு கையிற் கொட்டுக சப்பாணி
குறுநகை யார்பர வையினுட நழுவுகை கொட்டுக சப்பாணி. (எ)

மங்குலி னுருமே றெனவதிர் குயவரி மாறுற வதனோடு [ன்றப்
மலர்விழி காலையிற் செய்திடு போர்த்தொழில் வாய்கன விற்றூ
பொங்கு சினத்தொ டெழுந்தெதிர் நிற்கும் பூவினர் வேங்கையினைப்
புழைபட வேதந் தந்தாற் குத்திய புகர்முக வேழம்விழித்
திங்கிது வஃதல வென்றக நாணுற விரிதரு சாரற்சூழ்
எழின்மலை நாட்டிறை சேரற் கோருயி ரெந்தாய் மதுதோயும்
கொங்கிற் செறிமலர் மாலைத் தோளிறை கொட்டுக சப்பாணி
குறுநகை யார்பர வையினுட நழுவுகை கொட்டுக சப்பாணி.(அ)

வேறு.

தழைவிரி கொன்றைத் தாரணி செஞ்சடை மாதோர்பால்
தானுறெஞ் சகமகி டமிழ்மறை யருளிய சைவாசிர்
மழைநிகர் குழலினள் சங்கிலி யைப்புணர் யாண்டோளா
மண்புகழ் வெண்பாக் கத்தினி லூன்றுகோல் வாங்கினவா

பிழையறு மேயர் கோனுயிர் பெறவருஞ் செயல்செய்தோய்
பீடுறு பெருமிழ லைக்கோ னுக்கருள் பெரியோனே
குழைவழை யோன்புக ழழகா கொட்டுக சப்பாணி
கொங்கார் மலரணி மார்பா கொட்டுக சப்பாணி. (கூ)

நீனிற மார்பூ கத்தினி னலரா மென்பாளை
நீரா வியினிற் றோன்றிய நீழலை வன்மீனென்
றேனிற மலர்மிசை யாதஞ் சிச்செலுங் காரான்பின்
இருசிறை யன்னஞ் சென்றிழி பாலை நகருஞ்சீர்
வானுறு புகழார் வயல்சூழ் காஞ்சியின் வந்தேகண்
மாணுற வொன்று பெற்றரு ளியவெம் மன்னவோ
கூன்மதி வேணி யன்றோழா கொட்டுக சப்பாணி
கொங்கார் மலரணி மார்பா கொட்டுக சப்பாணி. (ய)

சப்பாணிப்பருவம் முற்றிற்று.

## ரு-வது முத்தப்பருவம்.

தேவர் பெருமான் கயிலைதனிற் றேவி தனக்குக் குற்றேவல்
செம்மை யுறச்செய் சேடியராற் றென்பாற் றிசையி னிற்றோன்றிக்
காவ லரச னரசிங்கக் கண்ணி யன்பா லன்போடு
கனிவாய் வளர்ந்த கண்மணியே கண்ணே யமுதப் பெருக்காறே
நாவ னகரில் வருங்கோவே நல்லோர் போற்று மணிவிளக்கே
ஞானக் கனியே செழுந்தேனே நகுமா மணியே சுவைப்பாகே
மூவர் கோனுக் குறுதுணையே முத்தந் தருக முத்தமே
மொய்யார் குழற்றை யலர்கண்மகிழ் முத்தந் தருக முத்தமே. (க)

மதுர மழலைச் செவ்வழிப்பண் வரிகள் முரலுந் தேஞ்சோலை
மணமார் கமலப் பூவாவி வண்மைச் சாலி விளைவயல்கள்
விதுவூர் மாடஞ் சூழொற்றி வியனார் நகரிற் சங்கிலியை
வியந்து மகிழ்ந்து மணம்புரிந்த விமலா நம்பி யாரூர
கதுவார் தலையிற் பலிகொள்ளுங் கண்ணார் நுதலோன் றனக்குரியாய்
கலவ மயிலு மியல்விரும்பிக் காண வருஞ்சிங் கடியப்ப
முதுமை யோர்க டிபுலவ முத்தந் தருக முத்தமே
மொய்யார் குழற்றை யலர்கண்மகிழ் முத்தந் தருக முத்தமே. (உ)

வேளை யெரித்த விழியாளன் வேண்டுந் தமிழ்மா மறைமுத்தே
வியனார் நாவற் பதிமுத்தே விளங்கு மறையோர் குலமுத்தே
தாள மரைவா விகள்சூழுந் தண்ணார் கமலைப் பதிமுத்தே
சான்றோர் நிதமுந் துதிமுத்தே சார்ங்க மாயோன் றொழுமுத்தே

நாளுஞ் சடைய னார்தோன்மே னன்று முத்தே யிசைஞானி
நல்லாள் வளர்க்க வளர்முத்தே நரசிங் கரையர் மகிழ்முத்தே
மூளு மார்வச் சங்கிலிக்கி முத்தந் தருக முத்தமே
மொய்யார் குழற்றை யலர்கண்மகிழ் முத்தந் தருக முத்தமே.(௩)

சீதப் புனலார் வயல்சூழ்ந்த சிரோங் கம்பர் சோமாசி
செய்ய தவமார் மறையோர்க்குச் சிந்தை மகிழ மிகுநன்பா
மாதர் நல்லாள் சவிமருகா மறையோ ரேத்துங் குணக்குன்றே
வையங் காவற் சேரலர்கோன் மனதுக் கிசைந்த மான்போயே
ஏதர் திருங் குதிரைமுத லெல்லா நாகைத் தலத்தினிலே
எந்தையியப் பெறுவோனே யிணையொன் றில்லாப் பெருவாழ்வே
மூதுற் றுணர்வோர் மனக்கோயின் முதல்வா முத்தந் தருகவே
மொய்யார் குழற்றை யலர்கண்மகிழ் முத்தந் தருக முத்தமே.(௪)

நாள மரைப்பூ வாயிரநா ஞளுஞ் சாத்தி நல்லாழி
நம்ப னருளப் பெறுமாலின் நறையார் துளவத் திருமார்பை
வேளூற் றிடுசீர்ப் பொன்றவஞ்செய் மேன்மை யுறுநற் றிருவாரூர்
விடங்கப் பெருமான் றிருவருளால் விரைசேர்சாந்த மலர்வேய்ந்த
காளைத் தம்பி ரான்றோழா கரிய முதலை வாய்மதலை
காலத் தமிழ்மா மறைப்பதிகங் கழறுங் கருணைச் சாகரமே
மூளுற் றிடுமும் மலப்பகைகள் முறிய முத்தந் தருகவே
மொய்யார் குழற்றை யலர்கண்மகிழ் முத்தந் தருக முத்தமே.(௫)

வேறு.

விண்டேறு தாவலை விரைந்துபல் வெவ்வேறு மிகுதி வகத்தடைந்து, மேவுதன் பானிரம் பும்பொரு ளிறக்கியே வேறுபொருளேற்றி மீளும்; வெண்டாழை மலர்கானல் சூழாழி யிற்கலம் வினைகழிப் பினிலார்ந்து செல், மேதையுட லனைதோற்ற மிகுமொற்றியூர்மேவு விமலனருள் பெற்ற வேளான்; பெண்டா னுடன்கலந்தின்பினைப் பெறுதேவ பேசரிய வன்பர் பெருமை, பிறங்கவே தொகைசெய்த பெரியனே வண்டுமுரல் பிணைமலர்க் கண்ணி வேய்ந்த; மண்டான மர்முழவ நிகர்தோள தமிழ்நாறு மலர்வாயின் முத்தமருளே, வரைராயன் மகண்மேனி தருசாயன் மாதர்மகிழ் மலர்வாயின் முத்த மருளே. (௬)

நறுமணங் கமழ்புன்னை சூழ்கான லொற்றிநகர் நங்கைசங்கிலிமணந்த, நடக்கையைக் கேட்டுளம் வெதும்புமா ரூர்ப்பரவை நலமறு பவிக்க நாதன்; உறுதூது சென்றநா ளடைப்பையேய் திக்குரும் முளமகிழ்ந் தலர்தொடுத்தி, உண்மையன் பான்கூறு நீக்கியருடந்தவா வுலகெலாம் புகழ் பெற்றவா; எறும்வலிச் சினமுதலையுண்டமகன் மீண்டுவர விளியபாச் செய்தவள்ளால், வமத்தை மணி

முத்த நதியிலிட் டாரூ ரிருங்குளத் தெடுத்த மூர்த்தி; மறையுரையு மேற்குலத் துதித்தகெம் பிரானே மலர்வாயின் முத்த மருளே, வரை ராயன்மகன்மேனிதருசாயன்மாதர்மகிழ்மலர்வாயின்முத்தமருளே.

கருப்பொனாற் செய்தகந் திணைமுறிக் கோட்டுபேர்க் கனவ லிப் பாகு சிறிக், கழைசுளித் துத்தன்ற னிழலை வெகுண்டுமீக் கன மழையும் வெள்கி யோயப்; பெருகுமும் மதநீ ரொழுக்கிமொய் கேசரம் பெயரவே யோட்டி யங்கி, பிறங்குபொறி யுமிழ்கின்ற சிறு விழிப் பெருகும்ப பிறைதந்த சூர்ப்ப கன்ன; உரலையொத் திடு கால்க ளுறுகரி மிகுந்துலவு மோங்கணு டாளு முதியர்க், குயர் நண்ப சந்த்ரவத னத்தெமது சுந்தரா வும்பரைக் காத்த பெரும; மரையொத்த செஞ்சி றடிக்குரிசி லெந்தையே மலர்வாயின் முத்த மருளே, வரைராயன் மகன்மேனி தருசாயன் மாதர்மகிழ் மலர்வா யின் முத்த மருளே. (அ)

வேறு.

திங்க ளோடறல் பணியும் விரவிய செய்ய வேணியன் பல்பதி
சேர்ந்து மாமறை யோது மாண்புடன் திரைய காவிரி வழிவிடும்
துங்க மோடுமிட் டிகைபொன் னுனதுந் தூய மாநதி யிட்டபொன்
தொன்மை மேவிய கமலை வாவியி லேய்ந்தெ டுத்தது மாசிலா
எங்க ணம்பனார் தூது வந்தது மேந்திழைப் பரவை கையிலே
எய்து நற்கிளி கூறக் கேட்டக மின்பு டன்மகி ழேந்தலே
பங்க யக்கணன் போற்று கின்றசீர்ப் பண்ணவா முத்தந் தருகவே
பழமறைக்கிழவன்விழைவுறுந்தமிழ்ப்பவளவாய்முத்தந்தருகவே.

உருவி னழகுடன் வரைய முடிவில வுலமு மிகரறு தோள்களும்
ஒளிகொண் மணிபதி கடக மணிதரு முமிழு நறைமரை யத்தமும்
திருவ ளுள்பரவை நகில மூழ்கிய செய்ய மார்பமுஞ் செம்மணி
செற்ற நூபுர வனச பாதமுஞ் செஞ்சு டர்ப்புரை யுவ்விசேர்
குரும ணிச்சுடிகை நான்றபாலமுங் கொம்பின்றேனிகரினியவாய்
குளிர்ந்த நீர்நனை மேனி யுஞ்சிவங் குதுக லித்திடு வதனமும்
பருவ முங்கொ ளுஞ் சிறிய பாலக பண்பனே முத்தந் தருகவே
பழமறைக்கிழவன்விழைவுறுந்தமிழ்ப்பவளவாய்முத்தந்தருகவே.

முத்தப்பருவம் முற்றிற்று.

## ௬-வது வருகைப்பருவம்.

துளிமது வொழுக்குசெஞ் சரோருகப் பதமதிற் சுவணச் சிலம்பொ லிக்கத், தூயவரை வடமிளிர வுதரபந் தனமினச் சுந்தரத் தகல மணியும்; நளிர்கதிர்ச் செம்மணித் தாரொளிர நற் றோளி னகுபொன்செய் வலய மிலக, ஞானமே திருமேனி யாகி

வரு நம்பனூர் நாட்டாவ ணம்ப ழித்த; ஒளிகைத் தலத்தினிற் கடக நக வங்குலிக ளோங்குமணி விக மவிர, உச்சியிற் செம்பரிதி யனையவொளி மணிபிழைத் துயர்சூழி யந்து லங்க, வளிவளரு மொழியா ரத்தோடு செவிதிகழ மறையோது மகவருகவே, மரு மலர்க் குரவமணி குழலினர் மருவுபுய வன்றொண்ட னூர்வ ருகவே.

பேரோங்கு புகர்முகத் தாம்பலுங் கிள்ளையும் பொழிதருவி லாழி நீரும், பொன்னேரு மாதர்குழ லணிமலரி னின்றொழுகு புது மணத் தேனு மரைபர்; சீரோங்கு மார்பமணி தாரொழுகு பிரசமுஞ் சிவனடியர் கண்ணி னின்று, தெளியுமா னந்தத்தி னுலொழுகு நீருஞ் சேறுசெயும் வீதி யாரூர்; காரோங்கு கறைமிடற் றண்ணல் வன் மீகனூர் களிதோழ வுலகவானர், கானரிய முத்திக்கு வழி காட்டவந்தவா கழறருஞ்சிரினேய்த்த; வாரோங்கு தவப்புலிப்பால னூர் போற்றுநல மாண்டவெம் மிறைவ ருகவே, மருமலர்க் குரவ மணி குழலினர் மருவுபுய வன்றொண்ட னூர்வ ருகவே. (உ)

வரிபளிகள் முரல்கின்ற மலர்பயித் தையற்கு வண்மையார் கயிலை தன்னில், வாரலங் கற்றொடுத் தியுமெங் குடிபோற்று மாணுறுங் கருணை மலையே; திரையகா விரிநீர் வழிவிடச் சேர்நண்பர் சேரர்கோன் றன்னொ டெய்திச், சிவபிரான் பதிகளுக் கெய்தியே தமிழ்மறைகள் செப்பியருள் சில வரையர்; நரசிங்க முனையருக் கன்புகூர் தருபுதல்வ நற்சடங் கவிபூ சுரன், நாடரிய தவமகட் கருண் ஞான வழிகாட்டு நாதனே வனப்ப கைக்கு; மருவுசீர்த் தந்தையாய் வந்தவெம் மிறைவனே மலர்முகத் தொடுவ ருகவே, மரு மலர்க் குரவமணி குழலினர் மருவுபுய வன்றொண்ட னூர்வருகவே.

வானோர்க ளுடரிய மாதேவ னூர்ஞான வடிவினிற் றோன்று பெரும, வாரிதிக டைந்தநா ளெழுகரள மாஞ்ஞையால் வன்சங்கி தானங் கொணர்ந்; தேனோர்க ளுயிர்மீட்ட வேந்தலே யஞ்ஞான மென்னுநஞ் சுபிர கன்றே, இன்பமா மெய்ஞ்ஞான வமுதுணத் தமிழருளு மிறைவனே நாகை நகரில்; வானேன்மை யுருவடிவ விழுளிபெறு கெம்பிர மாதவஞ் சேர்கு றும்பர், வளர்யோக வாசிரிய வேயர்கோன் றன்னேய மாசற்ற புக ழுற்றவா; மானூர்கண் மடமாதர் பயில்வீதி நகர்நாவல் வருமெங்கள் மணிவ ருகவே, மரு மலர்க் குரவமணி குழலினர் மருவுபுய வன்றொண்ட னூர்வருகவே.

குதலைவழி செங்கனித் திருவாயின் சுவைநனை கூறரும் பட்டு நனையக், குளிர்மொழித் தாய்மடியி னூர்ந்தேறி சடையனூர் குன்றனைய தோளு நைத்துத்; திதலையுறு கொங்கைவழி யமுதுண்டு செவிலியர்கள் சிற்றிடை யிவர்ந்திறங்கிச், சேவடித் தலத்திலொளிர் சிலம்புகள் சிலம்பவே தெருவோடி மீண்டு வருகால்; நுதலையிட

மாவுறுஞ் சுட்டியசைய யத்தாய் நோக்கியென் கண்ணின் மணியே, நுவல்வதற் கரியவொளி ஞானமாந் தீபமே நோன்மையார் தேவ ரமுதே; மதலையே யெனவழைத் திடவோடி மேல்வீழ் மறைக்கு லக் கோன்வ ருகவே, மருமலர்க் குரவமணி குழலினர் மருவுபுர வன்றொண்ட னார்வ ருகவே. (ரு)

வேறு.

தேனார் வனசத் தோட்டலர்மேற் செய்யா ரனைய வணங்கினர்கள்
செழிக்கு மிதழித் தியளிநோர் செறியுங் கூந்தல் புலர்வதற்குக்
கானார் பூழி லிடும்புகையுங் கரையில் வேள்வித் தீம்புகையும்
களித்துவிருந்தோர்க்கமுதூட்டக்கனலோங்கடுக்களைப்புகையும்
வானு ரெழிலி தனின்மயங்கும் வண்மை யாரூர் மேவியசீர்
வள்ளற் பெருமாற் கன்புடைய மாசிற் சீர்த்தித் தமிழ்ப்புலவா
மானார் விழியாள் பரவையணை மகிழ்நா வருக வருகவே
மல்கு பெருஞ்சீர் புல்குகின்ற மறையோன் வருக வருகவே. (சு)

மடலார் கமுகிற் பாய்வாளை மல்கு பழங்கள் சிதறடித்து
மலர்த்தா மரையிற் றுஞ்சுறுஞ்சீர் வயங்கு காஞ்சி நகர்மேவி
கடலார் நஞ்சுண் கம்பன்றாள் கருதி வேண்ட வவனருளுங்
கண்ணொன் றடைந்து மகிழ்கூர்ந்து கனிந்து கனிந்து மனமுருகி
அடலா ராலந் தானுகந்தென் னரிய தமிழ்மா மறைபாடும்
ஐயா மெய்யார் ஞானிகள்போற் றன்பாங் குன்றே யலையருகே
மடலா ரொற்றிச் சங்கிலிதோய் மணாள வருக வருகவே
மல்கு பெருஞ்சீர் புல்குகின்ற மறையோன் வருக வருகவே. (எ)

சேணார் புரிசை யவிநாசி சேவித் தகன்று துடிசைநகர்
சேரும் வழியாங் கானகத்திற் செல்லற் கியலா தேமயங்கக்
கோணு கினைப்பூ ணணியாகக் கொண்டோ னமலை யொடுவேடர்
கோலங் காட்டி வழிதெரித்துக் கூட்டிக் கோயில் வந்தருளிச்
சேணு ரமுதை மிகரடிசில் சிறக்கு முருங்கை யிலைக்கறியுஞ்
செறியுஞ் சுவைய பல்லுணவுஞ் சேருங் கணத்தா லிடவுண்ட
மாணார் நாவ லூராளி மன்னா வருக வருகவே
மல்கு பெருஞ்சீர் புல்குகின்ற மறையோன் வருக வருகவே. (அ)

வேறு.

மருவு நறைமலர் கயிலை வளரிறை வடிவி லணிய வருபவா
மதுரமொழுகிய தமிழினருமைய மறையினவன்சொல் வரைபவா
கருவின் கொடுமையை யகல வடியவர் கருணை பொழியு மெழிலியே
கரையில்வளமுறுகமலைநகர்வயின்கரியகுழன்மணங்கலையெலாம்
உரையும் பகவனை வினைசொல் பவனென வொளிர விடு னிகரிலாய்
உவணகிறைதரசிலைபொனெனவரவுளங்கொள்பெறுநலபுலவனே

வரையி னுயரிய புகழின் மறையவர் மதலே வருக வருகவே
மணமு முதுமிறை குணங லொளிகண வடிவ வருக வருகவே.

விளம விகனியை யெறிம னறிவரு வெளியி லுதய வருகவே
விமலே யுருவரு மகளி ரணைதரு மிகுமெ ழினிற வருகவே
களம லிகரள வரனை வழிபடு கனம றையவ வருகவே
கனவி னுமரிய வவனை மதுகடங் கயில்கொ ளவருள் வருகவே
தளவ முகைநிகர் வெயிற ரரிவையர் தமது பிதுர வருகவே
தனத னிகர்தரு பொறைய னுளமகிழ் தருமன் வருக வருகவே.
வளம லிகமலே யறலில் நிதியெடு மகிப வருக வருகவே
மணமு முதுமிறை குணங லொளிகண வடிவ வருக வருகவே.

வருகைப்பருவம் முற்றிற்று.

## எ-வது அம்புலிப்பருவம்.

உலகினுள் ளோர்சிலர்க் கமுதுதவி சிலர்களுக் கொவ்வாத விடமீருவை, உத்தம குணத்திறைவ னுமிவன் யாவர்க்கு மோவாத வமுதமீவன்; இலகுகலே யேறவுங் குறையவும் பெறுவைநீ யெந் நாளு நீங்காக்கலே, எழிலுணர்வு பெற்றுளா னிவன்வா னகத்தினீ யெய்துறுங் கால்விட்டினைக்; கலகமுறு முன்னுள னத்தினைப் பார்க்கவுங் கைத்துமன மெத்தநொந்து, கடிவாயில் மூடுவா ளுஞ்சகோதரிகளனில் காட்சிமலி யவண்மங்கலம்; அலகிலாக் காலமு மிருக்கவைத் தானிவனெ டம்புலீ யாடவாவே, அவனிமகிழ் சிவசமய நிலவவருள் சுந்தரனெ டம்புலீ யாடவாவே. (க)

தேனூறு கஞ்சப் பொலன்பொகுட் டுறைசெல்வி சீறடி வணங்கவழகார், தெய்வத் திருப்பரவை வதனத்தை யொப்புறுஞ் செம்மைநாம் பெறுககில்லோய்; ஏனே யிவன்முன்பு செல்வதெனநாணியே யிராமனீ வருவையாயின், இன்னபொழு தேயுன் கருத்தினுக்கிசையவே யின்றமிழ் வேதமோதி; வானுத னருள்கூட்டி வாழ்விப்பன் முதலேயுனு மதலேயைத் தந்தவள்ளல், வழங்குருள் குணத்தினே ளுதலாலிஃதுமொரு வாய்வார்த்தையருமையன்று; ஆனேறி யருள்வழங் கானேச னேடுநீ யம்புலீ யாடவாவே, அவனிமகிழ் சிவசமய நிலவவருள் சுந்தரனெ டம்புலீ யாடவாவே. (உ)

உன்பாலி னிவனுக்கு மிகுவிருப் பென்பதனை யுணர்வையேல் தாழாதநீ, யோடிவரு குவையுனக் கதுதெளிவி லாமையா லுரைப்பனுன் கேட்டுய்தியால்; தென்பா லுகந்தாடு பெண்பாகனுட்கொண்ட சேர்த்தகா டானேதிய, திருப்பாட்டி னிற்பித்த னென்றமுன் மொழியோடு செய்யபிறை சூடியென்ன; நன்பா வுறச்சொன்ன விதமு

ணர்தி யிவனர னன்பனு மாதலாலே, நாளு மிவனோடுநீ நண்பினைப் பெறுவையேல் நலமெலாமெய்திவாழ்வாய்; அன்பார்ந்த பரவைக்கு மணவாள னுமிவனொ டம்புலீ யாடவாவே, அவனிமகிழ் சிவசமய நிலவவருள் சுந்தரனொ டம்புலீ யாடவாவே. (ங)

புண்டரிக முனிசிறு னுமிழெச்சில் வேலையிற் போந்துளா யெனும்பழிப்பும், பொன்னனுங் குருபன்னி யைப்புணர்ந் தாயெனும் பொல்லாத பாவவுரையும்; தண்டரள முறுவனு ரியர்முகத் தொப்பெனச் சாற்றிழிவு மேனிவடுவும், சார்கலைகள் வளர்வதுங் குறைவதுட னின்றியே சந்தோட மாய்வாழலாம்; பண்டருந் தமிழ்மறையின் கூனோடு குருடுமே பாறுறச் செய்தபுலவன், பரமனைப் பரவைமா ளிகைதூது விட்டவன் பகரரிய மகிமைவாய்ந்தோன்; அண்டரும் போற்றுதவ வேந்தனு கியவிவனொ டம்புலீ யாடவாவே, அவனிமகிழ் சிவசமய நிலவவருள் சுந்தரனொ டம்புலீ யாடவாவே. (ச)

முருகார் மலர்ச்சோலை சூழ்முருகன் பூண்டிவழி முகிறவழுமலையநாடாள், மொய்கள்முரல் தார்மார்ப னுஞ்சேரர் கோவீந்த முழுநிதிக் குவைகண் முழுதும்; பெருகார்வ மொடுகொண்டு வருவேலை பரமனார் பிறங்குவினை யாடல்கருதிப், பெட்புறுந் தமதுகணநாதரைக் கள்வராய்ப் பெயர்வித்து நிதிகவர்ந்து; விரகார்ந்த கொடுகுமெவஞ் சிலைத்தலைப் பதிகம் விரும்பியப் பொற்கிழிகளை, மேன்மையா யீயக் கொளும்புலவ னுமிவன் வெகுள்வதன் முன்னரீங்கு; அருநார வருவையே னன்மையெல் லாம்பெறுவை யம்புலீ யாடவாவே, அவனிமகிழ் சிவசமய நிலவவருள் சுந்தரனொ டம்புலீ யாட வாவே. (ரு)

காவிரிக் குடிஞைவழி விடவேறி வருபுதல்வன் கல்யாண கோலமேனிக், காட்சியன் சித்தசன் றந்தைகா ணுதசீர்க் கழன்மலர் சிவப்பேறவே; நாவிரிப் புகழ்பரவை பாற்சந்து விட்டவ னுவலூர்ச் சைவமறையோன், நங்கைவே ளாளகுல தீபிகைச் சங்கிலியி னுயகன் மிழலைநாதன்; தூவிரிச் சிவயோக வாரியன் கண்ணுதற் றோழனர சிங்கமுனையன், சொல்லரிய நேமிகும் புத்திரன் றமிழாளி சுகபுருட னைபெரியோன்; ஆவிரிப் புறவமுகை நகையார்க டந்தையுட னம்புலீ யாட வாவே, அவனிமகிழ் சிவசமய நிலவவருள் சுந்தரனொ டம்புலீ யாட வாவே. (சு)

பண்ணேறு மொழியடியர் பெருமையா மமுதினைப் பாரினுள்ளோர்களுண்டு, பரமனார் தமதுதிரு வருளெனும் பயன்பெறீஇப் பரலோக மீதெய்தியே; விண்ணேறுதேவரெல்லாந்துதித்தேத்தவே விரையேறு கூந்தலுமையாள், வெஃகுறும் பரசிவத் தின்மயம தாகவே வியன்றமிழ் மறைகள்பாடு; தண்ணேறு நறியபூந் தார்மார்ப

னெங்கோன் றமனியச் சிலைகொர்த்த, தாளமா தியவடம் புனைகொங் கை மங்கையாஞ் சங்கிலி மணாளனெந்தை; அன்னேறு தவளகரி மீதுசெலு மன்னனுட னம்புலீ யாட வாவே, அவனிமகிழ் சிவசமய நிலவவருள் சுந்தரனொ டம்புலீ யாட வாவே. (எ)

வேறு.

தேனமர் மொழிசடங் கவிமறை யோன்பெண் சிவனடி மரைசேரச்
 சிந்தித் தருள்தரு தெய்வங் குண்டையூர் செல்வ ரிடம்பரமன்
தானமர் வித்திடு நெற்பெறப் பாடிய சதுரன் குருகாவூர்த்
 தனியதர் பொதிசோ றானிட வுண்டரு டன்மையன் வேணுபுரக்
கானமர் கொன்றைக் கண்ணிய னடாவில் கழறரி சனஞ்செய்தோன்
 கனக சபாபதி யருடலை மேற்கொடு கமலைப் பதிசென்றோன்
வானவர் போற்றுறு மகிபனொ டாடிட வாவம் புலிவாவே
 மணிகொழி துணிநீ ரணிநா வலனிடம் வாவம் புலிவாவே. (அ)

செங்கல் பொன்னாப் பெறுமருட் செல்வன் சிகரத் தணிமாடத்
 திருவா ரூர்த்தே வாசிரி யன்பாற் சீரா ரடியாருக்
கிங்கடி யேனென் றிடுதொண் டத்தொகை யிசையும் பெரியோனல்
 எழில்கோட்புலிபுதல்வியர்களின்றந்தையேத்துகூடலையாற்றூர்த்
திங்க ளணிந்தவ னெதிர்வந் திருவெனச் சீர்வடி வுடைபாடும்
 திவ்வியன் பரவை தோய்ந்திடு மார்பினன் சினகரந் தொழுநேயன்
மங்கலி லருண்மே னியனுட னாடிட வாவம் புலிவாவே
 மணிகொழி துணிநீ ரணிநா வலனிடம் வாவம் புலிவாவே. (கூ)

அல்லிக் கோதைய ரூடற் பரிதரு மணிமுத் தறுவிதி
 யழகார் மேதிகள் கவையடி வைத்திட வஞ்சு முனைப்பாடி
மல்லற் றிருநா டுடைய சிகாமணி மருவார் புரமூன்றும்
 வாணகையாலெரி தானுவை நகர்தொறும் வான்றமிழ் மறைபாடி
சொல்லற் கருமைய நல்லருள் பெற்றவன் றொன்மைய சிவசமயத்
 தூநெறி யாருங் கண்டருள் சாகரந் தோய வியற்றியருள்
வல்லொத் திடுதன சங்கிலி யானிடம் வாவம் புலிவாவே
 மணிகொழி துணிநீ ரணிநா வலனிடம் வாவம் புலிவாவே. (௰)

அம்புலிப்பருவம் முற்றிற்று.

## அ-வது சிற்றிற்பருவம்.

பொன்னங் குடுமிக் கயிலைமலைப் பொருப்பன் மேனிச் சாயறனிற்
 போந்த சிறுவ பங்கயத்தைப் பொருவுஞ் சிறுதா ளாலியாங்கள்
வன்னம் பலவா மணிகளினல் வாளார் நுதலின் வேர்வரும்ப
 வஞ்சிக் கொடிநே ரிடைவருந்த வயங்கும் பலவிற் குமரிகள்சேர்ந்

துன்னுஞ் சிவனைப் பூசைசெயு மொண்மா ளிகைக ளடியவரை
ஊட்டு கூட மாதியவா யுளூற்று மறைக ளிவைகளூறுந்
தென்னூர் நரசிங் கன்சிறுவா சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
தேளூர் நாவ லூராளி சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (க)

கங்குல் பகலென் றிருபேதங் காணு வகையாக் கதிர்மணிகள்
கதித்த சோதி விமொடங் காட்சி யுறுஞ்சீர்ச் சூளிகைகள்
தங்கு வளஞ்சேர் திருவாரூர்த் தனிமா நகரத் தடப்பொழிலில்
தண்ணூர் பிறைபோ னுதற்பரவை தன்னோ டுலவும் போதவடன்
அங்கப் பதங்கள் பழம்வருத்த வவற்றைச் சிதைத்தே யயனீக்கல்
ஆகு மதுபோ லிங்கென்னோ வதனை யியற்றல் முறையன்றால்
செங்கண் மாலைக் காத்தருளுஞ் சிறுவா சிற்றிற் சிதையேலே
தேளூர் நாவ லூராளி சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (உ)

முருகார் நறையச லளிவேட்கு முகிலார் பொழிலி னிடையாங்கள்
மொய்யார் வேங்கை யடியரம்பை முதிருந்தாற்றுக் கனிவருக்கை
பெருகார் சுவைத்தே மாங்கனிகள் பெயருந் தேன்விட் டளவளவிப்
பிறங்குந் தாது விதையரிசிப் பெரிய தேங்காய்க் கடமிரப்பிக்
குருகார் கரத்தால் வழிவந்த குமரக் கடவு டந்தையடி
கும்பிட் டுனது பாடல்பெறுங் கோல நகரம் பலசெல்லுந்
திருகா ரடியார்க் கமுதூட்டுஞ் சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
தேளூர் நாவ லூராளி சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (ங)

செங்கட்கயவாய் மோட்டெருமை செழுநீர்க்குவளைப் போதருந்திச்
சேறு நிறைந்த செயிற்புகவே சினையார் சங்கந் தவழ்ந்தேறி
அங்கண் மலருந் தாமரைமே லலறுஞ் செல்வ வாரூர
ஐய நீபோற் றுளுடைய வரசு பிள்ளை யவர்மாற்றூர்
பங்க வருகர் தலைகளுடன் பாழி யலவே வாசகர்க்குப்
பகையாம் பவுத்தர் குடிலமல பரனூர்க் குரிய நம்பிகளே
இங்க ணிகர்நீ றணிசைவச் சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
தேளூர் நாவ லூராளி சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (ச)

சீத மலர்ப்பூம் பொழில்சூழ்ந்த தெய்வக் கயிலை மலைமேய
தேவர் பிரானுக் கொருதோழ செங்காற் பசிய சூட்டரச
ஓதி மஞ்சேர் கமலவய லொற்றி யூரின் மகிழடியில்
ஓதுங்கியிருவென் றவற்குரைத்த வொப்பில்பொருளே யம்பர்நகர்
மாத வஞ்சேர் சோமாசி மாறற் கரனை மாதோடு
மகிழு மதுக்கு டங்கொண்டு வரவே செய்த மாதேவ
தீதி லாத விசைஞானிச் சிறுவா சிற்றிற் சிதையேலே
தேளூர் நாவ லூராளி சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (ரு)

துறையூர் நறையூ ரிதழிபணி தோலை யுரித்தோன் றனையேத்தித்
தூய தவமார் நெறிவேண்டிச் சொல்லு மலையா ரருவிப்பா
டிறையே நாகைக் காரோணத் தெந்தை வேண்டும் பொருள்தரவே
எழிலார் பத்தூர் பாடியசி ரேந்தால் வாய்ந்த வளஞ்சுரந்த
மறையோர் வாழுந் தில்லைநட மன்னும் பெருமான் றண்ணளியால்
மாண்ட திருவா ரூர்புக்கு மாது பரவை யணைந்துகந்த
சிறைசேர் நீர்சூழ் முனைப்பாடிச் செல்வா சிற்றிற் சிதையேலே
தேரூர் நாவ லூராளி சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (௬)

நிறைந்த வளங்கூர் திருப்புன்கூர் நிமலன் றன்னை மிகப்போற்றி
நீண்ட விசும்பு மழைபொழிய நிலம்பன் னிரண்டு வேலிகொண்டு
உறைந்த மேக மழைநீங்க வோங்கு மோர்பா னிருவேலி
உறவேகொண்டு மகிமையைக்காட் டொளிசேர்புலமைக் கெம்பிர
மறைந்து மலங்கள் பசுபதியை மாணக் கூட வருள்வழங்கும்
வள்ளா றென்பாற் றிசைவாழ வந்த முதலே திருமுறைப்பண்
சிறந்து பாடுந் திருவாரூர்ச் செல்வா சிற்றிற் சிதையேலே
தேரூர் நாவ லூராளி சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (௭)

சவியர் மாதின் மருமகனே சான்ற செங்குன் றூரடியார் [டின்
சலங்கொண்டதனைமாற்றுதற்றுஞ்சகத்திலுள்ளோரரன்கொண்
சுவையாரமுதையுண்ணுதற்குந்தொண்டர்நெறியைக்காட்டுதற்கும்
சோதிப்பெருமான்றிருவருளாற்றொண்டத்தொகையைப்பாடியரு
நவமார் செயலாய் ஞானியர்கள் நலமாப் புகழும் பெரியோனே [ள்
நறையார் தாரான் சேரர்பிரான் நண்பா வேலை வார்குழலாள்
சிவமார் பரவை தோய்மார்பா சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
தேரூர் நாவ லூராளி சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (௮)

மன்றல் கமழுஞ் சோலைசெறி வளஞ்சேர் புத்தூர் நின்மணத்தில்
வந்த பெருமா னவணத்தால் வலிந்து வாது புரிநாளில்
அன்றிற் பனைசேர் முனைப்பாடி யரைய னாகி நினைவளர்த்தோன்
அருமைத் தந்தை சடையனா ராகு மிவர்க ளெங்குற்றார்
கன்றுகின்ற வெமதுள்ளங் கழறாய் பெரும வவர்கள்மனங்
கல்லோ வலது வல்லிரும்போ கரைய விலையே நின்னிடத்து
சென்று செறியு மன்புடையேஞ் சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
தேரூர் நாவ லூராளி சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (௯)

ஆதி பகவன் றிருமேனி யழகிற் பொலிந்த மணிவிளக்கே
அரிய ஞானப் பெருமலையே அருளா னந்த வாரிதியே
சாதி கமழுங் குழலவிழச் சசியேர் நுதலின் வேர்வரும்பிச் [டையும்
சதிரார் திலதங் கரைந்தொழுகத் தளிர்த்த கொடிபோ லுடங்கி

வேதை யுறப்பங் கயக்கரங்கள் மிகவுஞ் சேப்ப நடைதளர
மிகுந்த விருப்பத் தடிச்சியரே மேவா ரலவே நுந்தமக்குச்
சேதுமணிக ளாலியற்றுஞ் சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
தேரூர் நாவ லூராளி சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (ய)

சிற்றிற்பருவம் முற்றிற்று.

## கூ-வது சிறுபறைப்பருவம்.

ஐவகைப் பூதங்க ளாதிய சராசரம் யாவும் படைத்த வயனை, அழகுறுங்கொப்பூழி லலர்வித்தவனமாலை யச்சுதன் பூவைமேனித்; திவ்யபொன் னுடையிடைய னண்டங்க ளுண்டவன் செகமெலாங் காக்குஞ் செல்வன், செங்கணன் பிரதிட்டை யாங்கலைக் குரியவன் சேர்ந்தவை யைந்து தத்வன்; தைவனைத் தற்றவன் பலவாண்டு தேடியுங் காணொனாக் கழல்க ளேவைக், கருதரும் புகழ்பெற்ற வாரூரில்வருபரவை கனமா ளிகைக்கணேவும், தெய்வவருள் கைவந்த சைவவே தியன்மதலை சிறுபறை முழக்கியருளே, தேவரா தியர்புகழு நாவலூ ரதிபனே சிறுபறை முழக்கி யருளே. (க)

வேதாக மங்களோ டெகிட்ட மாறங்க மென்மேலு மிகமுழங்க, விஞ்ஞான கலர்களொடு பிரளயா கலர்களும் விளம்புசக லருமுழங்க; மாதாரும் பாகனடி மறவாத தொண்டர்கள் மலர்வாயின் றுதிமுழங்க, மாயிரு விசும்புளார் முழங்கமா லயனோடு மகபதி முழங்கவுலகில்; கோதார்த லில்லாத வாலயத் தின்விதிகள் குறைவுறா தேமுழங்கக், கொன்றையணி கோடீர னடனபா தத்திலணி குளிர்சிலம் பொலிமுழங்கச்; சீதார விந்தபுய மறையோர் முழங்கவே சிறுபறை முழக்கியருளே, தேவரா தியர்புகழு நாவலூ ரதிபனே சிறுபறை முழக்கி யருளே. (உ)

அங்கண்மா விருஞாலஞ் செய்தநல் வினைவயத் தணிகயிலை நந்தனவனத், தடையனிந் திதைகம லினியனங் கினர்களை யருளினன் வெஃகுமாட்சி; மங்கைபங் காளனூர் கருதிநீ பூவினின் மன்னியம் மாதராரை, மகிழ்வாய்ப் புணர்ந்தின்ப மெய்துவா யென்றருள மனதினிற் றுயரமெய்திச்; செங்கைகள் கூப்பியே யடியற் றடுத்தாளுஞ் செம்மலே யெனப்போற்றியே, சிவதொண்ட னுவலூர்ச் சடையனூர்க் கிசைஞானி சீர்மணி வயிற்றுதித்த; சிங்கலில் குழவியே மங்கலம் பொலிகோல சிறுபறை முழக்கி யருளே, தேவரா தியர்புகழு நாவலூ ரதிபனே சிறுபறை முழக்கி யருளே. (ங)

தண்டாத புயவீர நரசிங்க முனையராஞ் சான்றசீ ரரசர்தன்பால், தான்வளர்ந் தரியநூல் பூண்டுகலை பலவாய்ந்து சங்கையில் லாதபுத்தூர்; பண்டா னருமறைச் சடங்கவிப் பேதையைப் பண்புற

மணக்கவெண்ணிப், படர்ந்தந்த மண்டபத் தெய்துகால் கயிலைவாழ் பரமன்வே தியனாகியே; கண்டார்க ளதிசயித் திடவெய்தி யாவணங் காட்டிநீ யடிமையென்று, கழறவே பித்தனென வைதே பறித்த தைக் காணாத கிறமுதியோன்; தெண்டார்கை யோச்சிமுறை யோ வெனச் செய்தவா சிறுபறை முழக்கியருளே, தேவரா தியர்புகழு நாவலூ ரதிபனே சிறுபறை முழக்கியருளே. (ச)

புத்தூரின் மறையோர்க ளுமதூரி னிவ்வாது போகவென் றறைய முதியோன், போகவவன் பின்னர்திரு வெண்ணெய்நல் லூரிற் புகுந்துமறை யோர்கண்முன்பு; பித்தனுக் கடிமையா ரூா னென் றெழுதடிமை பேசோலை தொன்மை காட்டப், பேச்சொன் றிலாமலே மனமிசைந் தவன்பினே பெட்பருட் டுறையு ளெய்த; அத்தன்விடை மீதிவர்ந் தனங்கோடு காட்சிதந் தடியனீ வேண்டி யாங்கே, ஆண்டனம் பித்தனென முன்னம்மை வைதபடி யணிப்பா விசைப்பா யெனச்; சித்தத்தின் மகிழ்கொளீஇ யுலகுயப் பாடியவ சிறுபறை முழக்கி யருளே, தேவரா தியர்புகழு நாவலூ ரதிபனே சிறுபறை முழக்கி யருளே. (ரு)

வேறு.

மண்டனி லுன்பேர் வன்றொண்ட னெனவே வழங்குக விதுமுதலா
 வாழும் பலதா னத்தினு நம்மை வண்டமிழ்ப் பாடுகென
பண்டரு மறையோன் மறையத் துறையூர் பண்பார் தவநெறியைப்
 பாங்குற மேவிச் சித்தவடத்திற் பரமன் றிருவடியேற்
றண்டர்க் குறுதிய தில்லை யடைந்திறை யருடனை மேற்கொண்டே
 யணைநீர்க் காழியை வலமெய் துறுகா லரனைக் கண்டுபணி
முண்டத் திருவெண் ணீறணி கோல முழக்குக சிறுபறையே
 முண்மொய்த் தாட்கம லத்தலர் மாமுக முழக்குக சிறுபறையே.

திருவா ரூர்புக் கம்பிகை கேள்வன் றிருவருள் கொண்டுதவஞ்
 சேர்கோ லத்தை யகன்று மணங்கொளுந் திவ்விய கோலமுறீஇ
உருவார் தம்பிரான் றோழனென் றேபே ருற்றே பரவைமணர்
 தொளிர்தொண் டத்தொகை யான்விறன் மிண்டர்த முள்ளங்களிவித்தே
தருதா ளாண்மையர் குண்டையூர் நென்மலை சாலும் பரவைமனை
 தன்னிற் கொணர்வித் துப்புக லூரிற் றலையணை செங்கல்லை
முருகார் சோதைக் கரியாப் பெற்றவ முழக்குக சிறுபறையே
 முண்மொய்த் தாட்கம லத்தலர் மாமுக முழக்குக சிறுபறையே.

கோலப் பாச்சி லாச்சிரா மத்திறை கொடுபொற் குவைபெற்றுக்
 கூடலை யாற்றூர் வழியிது வென்னக் குளிருள மகிழ்கொண்டே
ஏலப் போய்த்தமிழ் பாடிநன் முதுகுன் றெய்திநல் லீசனருள்
 ஏமம் பன்னி ராயிர மணிமுத் தெறிதிரை நதியிட்டுச்

சீலக் கமலையி னீரி லெடுத்தணி செல்வப் பரவைமனஞ்
செழியச் செய்தணி குருகா வூர்வழி சிவனொரு மறையோனாய்
மூலத் தருடோட் கோப்புண வுண்டவ முழக்குக சிறுபறையே
முன்மொய்த் தாட்கம லத்தலர் மாமுக முழக்குக சிறுபறையே.

வேறு.

திருக்கச் சூரா னன்ன மெடுத்திட வுனுமரசே
திருவோ ணக்காந் தன்றளி குளக்கலன் தருமிதியை
உருக்கத் தோடு பெற்றோய் தெருட்டுறு தமிழ்மறையால்
ஒற்றி யூரிற் சங்கிலி தனத்தழும் புறுபுயனே
பெருக்கத் திருவா ரூர்வரு பரத்தைபால் பிறையணியோர்
பெம்மான் றன்னைத் தூது விடுத்தருள் பெரியவனே
முருக்கா ரிதழ்நறை யுண்டோய் முழக்குக சிறுபறையே
முச்சக மும்புகழ் பெற்றோய் முழக்குக சிறுபறையே. (௯)

தேவர் கோனு தியருயி ரிரட்சணை செயுநிதியே
திமிரப் புன்சம யங்கெட விழிக்கடை தருமணியே
நாவற் பதிவரு சைவா வரற்கொரு நலமுறுபேர்
நண்பா குறும்பூழ் சிவலொடு தளிகுறு கியவரசே
காவற் பதிநர சிங்க னுளத்துறு நறுசுதனே
காவிரி வழிவிட வையா றதிற்செலுங் கவினுடையோய்
மூவர்க் கொருமுதல் சாயல் முழக்குக சிறுபறையே
முச்சக மும்புகழ் பெற்றோய் முழக்குக சிறுபறையே. (௰)

சிறுபறைப்பருவம் முற்றிற்று.

## ௰-வது சிறுதேர்ப்பருவம்.

பிரசமொழு குறுசோலை சூழ்ந்தபெரு மங்கலப் பெரியவே ளாள குடிமைப், பெட்புற்ற வேயர்கோன் கலிக்காமர் பரவைபாற் பிரான்றூது சென்றதைக்கேட்; டரவெகுளி கொண்டான் போனு மிவனேவ லொப்பார்க ளடிய ரென்றே, உள்ளத்தின் மிகு துயர் கொள்வதைப் பரசிவ னுணர்ந்திருவர் கூட்ட வெண்ணி; கரையிலன் புடைகலிக் காமனைச் சூலைநோய் கனற்றவருள் செய்தி றக்கக், காட்டியுன் காட்சியா லுயிர்பெறச் செய்யவே கனியுநன் னண்பு கொண்டோய்; திருமணி யிழைத்திட்ட செம்பொனாற் செய் தநற் சிறுதே ருருட்டி யருளே, திரையபொரு ணைத்துறைக் குரிய வுதி யன்கேள்வ சிறுதே ருருட்டி யருளே. (௧)

தூயவொளி மணியாழி கரைசேர்க்கு நாகையிற் றும்பையணி வேணி பரனைத், தோத்திரத் தமிழ்மறைகள் பாடிநன் னவமணிகள் சொன்னவா பரண மாடை; பாயகந் தருவத்தொ டுடைவாள் பெறீஇத்திருப் பதிக்கண்டி யூரினின்று, பண்புறுஞ் சேரமா னுடன் பொன்னி வழிவிடப் பரம னையாறு கண்டு; நேயமார் பொருனையந் துறைவனொடு மலைநாடு நேர்ந்துபொரு ளோடு மீண்டு, நிகழ்வழிக் கள்வராற் பொருள்பறித் திறைவனூர் நிமிர்முருகன் பூண்டி யிற் றான்; தேய்பொருள் தரக்கொடுகு வெஞ்சிலைப் பாடியோய் சிறுதே ருருட்டி யருளே, திரையபொரு னைத்துறைக் குரியவுதி யன்கேள்வ சிறுதே ருருட்டி யருளே. (உ)

புவிபுகழ்ப் புக்கொளிப் பதிதடத் திற்கராப் புசித்தமறை யந்த ணன்றன், புதல்வனம் முதலையுமி ழப்பாடு மெந்தையே பொருவில் வஞ் சைக்க ளத்தில்; தவளயா னையின்மீதி னேறியுத் தரகயிலை தான்போகு நல்ல நாளில், தானெனை முன்படைத் தானெனப் பாடு மெந் தம்பிரான் றோழ நம்பி; சுவைபெற்ற வமுதுண்ட தேவரும் பெறலரிய தொண்டுகைக் கொண்ட தோன்றால், சுந்தரப் பெயரு டைய கெம்பீர வீரனே துங்கநவ மணிய ணிந்த; திவியவச் சுவ மேறி யேமனம் வருதேவ சிறுதே ருருட்டி யருளே, திரையபொரு னைத்துறைக் குரியவுதி யன்கேள்வ சிறுதே ருருட்டி யருளே. (ங)

தம்பானை யறியாத சாதியா ரென்னமறை தனியதிகை வாழ்பி ரானைத், தண்பொழிற் சித்தவட மாம்பெரு மடத்தினிற் றாளணிந் தேகு காலைக்; கைம்மாவி னூரியனைப் பாடியரு டேவனே கனகமலை நேர்த னத்தாள், கருதுபர வைப்பெணாள் கருத்தா லயத்தனே கனிதரு தவத்தி னேங்கிப்; பைம்மா சுணப்பரனை யேத்துமிசை ஞானியாம் பார்ப்பினியின் மணிவ யிற்றுற், பவமான சிறுவனே நாவலூர் நம்பியே பாருளோ ரேத்து வாழ்வே; தெம்மாறு நரசிங்க முனையரையர் மகிழ்செல்வ சிறுதே ருருட்டியருளே, திரையபொரு னைத்துறைக் குரியவுதி யன்கேள்வ சிறுதே ருருட்டி யருளே. (ச)

வளைத்தலை சுருட்டுபய வேலைசுர ருணவோடு வந்துந்தி பூத்த மாலின், மருமமாஞ் சேக்கையிற் பயில்பதும பீடிகையின் மாண் டகோ டற்க ரத்துக்; களித்துவைத் தன்பினுன் முத்தாடு தந்தை யுங் கவனுறக் குதலை மொழியார், கருங்குழற் பாவையாம் பெண் மணிசெய் தவமெனக் காசினியி லியாவர் செய்தார்; அளித்தலைய

கோதைகுழ லாரெலா நாளெலா மணங்குறும் படிய ணங்கா, அணங்கினக மகிழ்நீல மணிகறைக் கண்டனுக் கன்பனே யண்ண லெந்தாய்; திளைத்தலாற் பவநீக்கு காவேரி நன்னுட சிறுதே ருருட்டி யருளே, திரையபொரு னைத்துறைக் குரியவுதி யன்கேள்வ சிறுதே ருருட்டி யருளே. (ரு)

தொக்கபல புவனமொரு மிக்கச் சுமக்கின்ற தொல்கமடம் வெந்நொ ளிக்கத், தூமணிச் சூடிகைப் பைகிறி மாசுணத் தொகை யாயி ரஞ்சி ரங்கள்; உக்கவுதி ரத்துடன் மூளையும் வழிந்தொழுக வும்பலெட் டும்ம டங்கி, உவ்விகன் டத்தொடு முரிந்துவீழ்ந் திட வட்ட வுரகங்கள் கண்பி துங்கப்; பக்கத்தி லுறுகின்ற வேழ்கடலு நுரையெழப் பகரண்ட கூட முருவிப், பரலோக மப்பாலு மோங்கு சீர்க் கோபுரப் பாங்குபெறு கமலை நகரார்; திக்கெட்டு மேத்து பேர்ச் சுந்தரச் செல்வனே சிறுதே ருருட்டி யருளே, திரையபொரு னைத்துறைக் குரியவுதி யன்கேள்வ சிறுதே ருருட்டி யருளே. (சா)

கந்தையடு கோபக் களிற்றுக் கடற்சேனை கடுமெசுரர் கட்க டையினிற், கனலெழத் தொட்டுக் குடைந்துமூ ளையையுணுங் கழு துதிர வெள்ள நீந்தி; மொந்தையா தியவிய மொலித்துத் தூரோண மணி மொய்ம்மயிர்த் தலைப்பந் தாடி, முழுவலி யிழந்துபடு தாரகதத் திறலினை மோகமொ டணங்கு பேயின்; சிந்தைகொளு மூடற் றவி ரவே யளிகளச் செய்யவே லெய்யு முருகன், செயதுங்க னளிமேவு நீபமணி மார்பனர் திருத்தாதை யாஞ்சி வன்றான்; செந்துவர் மேனியயர் வுறவேற்ற வனமுனி சிறுதே ருருட்டி யருளே, திரைய பொருனைத்துறைக் குரியவுதியன்கேள்வ சிருதே ருருட்டியருளே.

மதிக்குழவி தவழுமா சினிமுண்ட கக்கனிகள் வானுறுந் தே ங்கு கனிகள், மண்டிய முழக்கோடு மோதவழி தேன்பெருகி வய லினிற் சாலி பாய்ந்து; சுதிக்குவழி காட்டுசீர் கமலத் தடத்தினிற் கால்வழியி னேடி யங்குக், கனமேதி பொழிபாற் கலந்துநதி சென்றுகார்க் கடலினிற் பாய்ந்து மல்கும்; மதிக்கரிய கூர்ப்பெனுஞ் சுவைநீக்கி யினியசுவை வாய்க்கும் படிக்கி யற்றும், மங்கலஞ் செய் காஞ்சி மாநகரில் விழிபெற்ற வள்ளலே வைய கங்கள்; திதிக்கவரு நாவலூர்ச் சிவவேதி யன்குமர சிறுதே ருருட்டி யருளே, திரைய பொருனைத்துறைக் குரியவுதியன்கேள்வ சிறுதே ருருட்டியருளே.

வேனிலுக் குரியகோ மகனேந்து கணையினுன் மெலிந்துமங் கையர்க ளின்மேல், விருப்பமெள் ளளவுமில் லாதனா னியருக்கு வீட்டினைத் தருவ மென்று; தானருளு மறையினு லுரைத்தபா ரேதிச் சடிலமார் பாசி வத்தைத், தண்பொழில்கள் சூழ்ந்ததிரு வாரூரி னேரிரவு சண்பகக் குழல்ப ரவைபால்; மானிலத் தோர்

புகழ வொருமுறைக் கிருமுறையின் மாண்டூது செல்ல விடுசேர், மறையினிற் றமிழ்பாடு மகிபனே யதிபனே மணவாள கோல மே னித்; தேனினத் தாமமணி மார்புடைய செல்வனே சிறுதே ருரு ட்டி யருளே, திரையபொரு னேத்துறைக் குரியவுதி யல்கேள்வ சிறுதே ருருட்டி யருளே. (கூ)

ஐந்தருவின் மிகுசெல்வ மமரா வதிப்பதியு மணியுமள கார கரமும், அச்சுதன் வாழும்வை குந்தமும் மலர்மேவு மயன்பதியு மொவ்வாத சீர்; முந்துதிரு நாவலூர் வருசைவ வேதியா முனிவருக் கரசனென, முழுதுணரு மெய்ஞ்ஞான வுபமனிய னற்புகழு முதல் வனே சத்வ குணனே; கந்தருவ மூங்களிறு மேறுநல் லரசனே காசினியி லஞ்ஞா னமாம், கலியொழிய வருண்மாரி யானதமிழ் மறைமொழியுங் கந்தரா சுந்த ரப்பேர்; செந்திருவி ளுள்பொலியு மந்தரப் புயாசலா சிறுதே ருருட்டி யருளே, திரையபொரு னேத் துறைக் குரியவுதி யன்கேள்வ சிறுதே ருருட்டி யருளே. (ய)

சிறுதேர்ப்பருவம்முற்றிற்று.

ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்பிள்ளைத்தமிழ்முற்றிற்று.

---

# இப் பிள்ளைத்தமிழ்

நள௵ ஆடிமீ 22௳ (6-8-'16) ஆதிவாரமும், ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கயிலைக்குச் சென்ற சுவாதி நட்சத்திரமுங் கூடிய சுபதினம் பிற்பகல் 3-மணிக்குச் சென்னை அருணசலேசுவரர் திருக்கோயிலின்கண் சித்தாந்தசரபம், அஷ்டாவதானம், சிவஸ்ரீ-கலியாணசுந்தர யதீந்திரசுவாமிக ளவர்களால் பல வித்துவான்கள் முன்னிலையில் அரங்கேற்றஞ் செய்யப்பட்டது.